விகுதிபெருமல் உகரவிகுதியின் திரிபாகிய இகரவிகுதி பெற்றுப் பராவி எனவும் வரும் [நன்-உயிர்-சூ-உஉ]. கை - முதலாகுபெயர். வெண்மையாகிய பாற்கடலை 'மையாழி' என்றது அதில் கண்வளர்கின்ற இறைவனது கரிய திருமேனியி னொளி பரந்து பாய்தலால் அக்கடல் கரியதாகக் காணலின். 'மாலனையான்' எனவும் பாடமுண்டு; பொருள் 'திருமாலை ஒத்தவர்' என்பது. (கூ0)

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

(இ - ள்) அவ் வேந்து - நளராசன், அப்பலகை ஒன்றின் - அவ்வொரு பலகை ஆட்டத்தில், அருகு இருந்தார் - பக்கத்திலிருந்த அரசர், மதிக்க - மதிக்கும்படி, செப்பு அரிய - (அளவிட்டுச்) சொல்லுதலரிய, செல்வத் திரு நகரும்-செல்வமிக்க அழகிய நகரத்தையும், ஒப்பு அரிய - உவமை இல்லாத, வல் தானையோடு - வன்மையாகிய சேனையோடு, வள நாடும்-வளப்பமாகிய நாட்டையும், வஞ்சனையால்-வஞ்சனையினால், வெற்றானை-வென்ற புட்கரனை, வென்றான் - (நகர முதலிய எல்லாம் தானடையச்) சயித்தான்.

(வி - ரை) செப்பு - முதனிலைத் தொழிற்பெயர்; இது எழுவாய்த் தொகாநிலைத்தொடராக 'அரிய' என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சங் கொண்டது. 'செப்பரிய' என்பதைச் செப்ப அரிய எனப் பதம் பிரிக்கின், பொருள்: 'சொல்ல அரிய' என்பது; நிலைமொழி ஈறு தொகுத்தலாய் அவ்வாறு நின்றதென்க. 'செப்பு' தெலுங்கு மொழியாதலால் திசைச்சொலென்க. பலகை - கருவியாகுபெயர். (கூக)

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்றிசைக்கும்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து.

(இ - ள்) அந்த வளநாடும் - வளப்பமாகிய அந் நிடததேசமும், அவ்வரசும் - அதை யாளும் ஆட்சியும், ஆங்கு-அவ்வோராட்டத்தில், ஒழிய - ஒழிந்துபோக, செம் தமிழோர் - செந்தமிழில் வல்ல புலவர், நா வேய்ந்த - நாவினால் தொடுத்த, சொல்லால் - செய்யுளால், நளன் என்று-நளராசனென்று, போற்று இசைக்கும் - துதியைச் சொல்லு கின்ற, கோ வேந்தற்கு - அரசர்க்கரசனுக்கு, எல்லாம் கொடுத்து - எல்லாச் செல்வங்களையும் (தோற்றுக்) கொடுத்து, வந்தபடியே-(ஒரு பொருளுமின்றி) வந்த விதமாகவே, வழிக்கொண்டான்-(புட்கரன்) போயினான்.

(வி - ரை) 'நாவேய்ந்த' என்பதை 'நா ஏய்ந்த' எனப் பிரித்து 'நாவில் பொருந்திய' எனப் பொரு ளுரைத்தலுமாம். போற்று-முத னிலைத் தொழிற்பெயர். ஏ-தேற்றம்.

"ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குறித்தே"

என்பதனால் 'செந்தமிழோர்' என்பது ஆரியமுதலிய பாஷைகளில் வல்லோரென்னும் தன்னினங் கொள்ள நின்றது. 'வந்தபடியே' என்றது கலிபுருடனுடைய ஏவுதலால் புட்கரன் தன்னோடு சூதாட வருகையில் ஒரு பொருளுமின்றி வந்து, தான் ஏறிவந்த கலிபுருட னாகிய இடபத்தைப் பொருளாக வைத்தாடினவனாதலால். நெடு நாளைக்குமுன் தோற்கப்பட்டன ஆதலால் 'அந்த வளநாடு மவ்வரசும்' என்றார். (கூஉ)

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்

பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கா னளன்.

(இ - ள்) ஏனை முடி வேந்தர் - (புட்கரனையல்லாத) முடியை யணிந்த மற்ற அரசர்கள், எத்திசையும் - எல்லாப் பக்கங்களிலும், போற்று இசைப்ப - துதியைச் சொல்லிச் செல்லவும், சேனை புடை சூழ - சேனைகள் பக்கத்தில் சூழ்ந்துவரவும், தேர் ஏறி - தேரின்மே லேறி, ஆன புகழ் - உண்டாகிய புகழையுடைய, பொன் நகரம் - அமராவதி நகரத்தை, எய்தும் - அடைகின்ற, புரந்தரனைப் போல - இந்திரனைப்போல, பொலிந்து - விளங்கி, நளன் - நளராசன், நல் நகரம் - நன்மையாகிய மாவிந்தநகரத்தில் புக்கான் - சேர்ந்தான்.

(வி - ரை) ஏனை - பிறிதென்னும் பொருள்படும் மற்றென்பதற்குப் பிரதிபதம். அமராவதி என்பது சுவர்க்கலோகத்தில் முதன்மையான நகரம். புரந்தரன் - (பகைவருடைய) உடலைச் சேதிப்பவன். நன்னகரம் - பண்புத் தொகைநிலைத்தொடர்; நன்மை யென்னும் நிலைமொழி நகரமென்னும் வருமொழிப் புணர்ச்சியில் மையீறு கெட்டு, ஈற்று லகரம் [நன்-மெய்-சூ உ௪-ஆல்] னகரமாகி, வருமொழிமுதல் நகரம் [மெய்-சூ-ந௪-ஆல்] னகரமாயிற்று. (கூ௩)

கார்பெற்ற தோகையோ, கண்பெற்ற வாண்முகமோ,
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ,—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர்.

(இ - ள்) பார் பெற்று - நிடததேச வுரிமையைப் பெற்று, மாதோடு - தமயந்தியோடு, மன்னன் வர - நளராசன் வராநிற்க, கண்ட - பார்த்த, மா நகருக்கு - பெருமையாகிய நகரசனங்களுக்கு, எதிர் - உபமானம், கார் பெற்ற - மேகம் வரப்பெற்ற, தோகையோ - மயிலோ, கண் பெற்ற - இழந்த கண்களைப் பெற்ற, வாள் முகமோ-

ஒளியாகிய முகமோ, நீர் பெற்று - மழைநீரைப் பெற்று, உயர்ந்த - வளர்ந்த, நிறை புலமோ - குறைவில்லா வயலோ, எது உரைப்பன்- (இவற்றுள்) எதைச் சொல்லுவேன்?

(வி - ரை) 'கார்' 'பார்' என்னும் விகாரப்பட்ட பண்புப்பெயர்கள் முறையே மேகத்துக்கும், பூமிக்கும் ஆனமையால் பண்பாகு பெயர். 'தோகை' என்னுஞ் சினைப்பெயர் முதலுக்கானமையால் சினையாகுபெயர். 'நகரம்' என்னு மிடப்பெயர் அவ்விடத்துப் பொருள்களுக் காதலால் இடவாகுபெயர். முன்னுள்ள 'ஓ' மூன்றும் ஐயப் பொருளன; ஈற்றிலுள்ள 'ஓ' ஈற்றசை.'எதுரைப்பன்?' என உடன்பட்டமையால் இம் மூன்றும் நகருக்கெதிரென்பது கருத்து. (கூசு)

"வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதையீ"
தென்றுரைத்து வேத வியன்முனிவன்—"நன்றிபுனை
மன்னு! பருவரலை மாற்றுதி!" என் றாசிமொழி
பன்னு நடந்திட்டான் பண்டு.

(இ - ள்) பண்டு - பூர்வத்தில், வேதம் - வேதங்களைப்போன்ற, இயல்-தன்மையையுடைய, முனிவன்-வியாசமுனிவன், வென்றி- (பகைவர்களையே அன்றிப் பொய்ம்மையையும் வென்ற) வெற்றியையுடைய, நிடதத்தார் வேந்தன் - நிடததேசத்தாருடைய அரசனது, சரிதை ஈது என்று - சரித்திரம் இத்தன்மையது ஆகுமென்று, உரைத்து - சொல்லி, நன்றி புனை - நற்குணங்களை (அணிகளாக) அணிந்த, மன்னு தருமராசனே!, பருவரலை - (சூதால் செல்வத்தை இழந்தோமென்று) துன்பப்படுதலை, மாற்றுதி என்று - நீக்கென்று சொல்லி, ஆசி மொழி - ஆசீர்வசனங்களை, பன்னு - சொல்லி, நடந்திட்டான் - சென்றான்.

(வி-ரை) பொய்ம்மையை வெல்லுந்திறம் அவனு லாளப்படுங் குடிகளுக்கு முண்டென்பார் வென்றியை அவனைச் சாரவையாமல் 'வென்றி நிடதத்தார்' எனவும், பொய்யா மொழியுடையானென்பார் 'வேத வியன்முனிவன்' எனவும், உடலைப் புனையும் அணிகளினும், நற்குண நற்செய்கைகளை யுடைமையே அமையுமெனக் கருதுவோனென்பார் 'நன்றிபுனை, மன்னு!' என்று னெனவுங் கூறினர். ஈது -

சுட்டடியாகத் பிறந்த குறிப்பு வினைமுற்று. ஆசிமொழி - ஆசியை யுணர்த்து மொழி'என இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனு முடன்தொக்க தொகைநிலைத்தொடர்; 'ஆசியாகிய மொழி' என இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடருமாம். (கூரு)

வாழி யருமறைகள், வாழிநல் லந்தணர்கள்,
வாழிநளன் காதை வழுத்துவோர்,—வாழிய
மள்ளுவநாட் டாங்கண் வருசந்திரன் சுவர்க்கி
தெள்ளுறுமெய்க் கீர்த்தி சிறந்து.

(இ - ள்) அரு மறைகள் - (உயர்வாகிய) வேதங்கள், வாழி - வாழக்கடவன; நல் அந்தணர்கள் - (அவ்வேதநெறியில் ஒழுகும்) சிறந்த பிராமணர்கள், வாழி - வாழக்கடவர்கள்; நளன் காதை - நளச்சக்கரவர்த்தியினுடைய (திவ்விய) சரித்திரத்தை, வழுத்துவோர் - கூறுபவர்கள், வாழி - வாழக்கடவர்கள்; மள்ளுவ நாடு - மள்ளுவ நாடாகிய, ஆங்கண் - அவ்விடத்து, வரு சந்திரன் சுவர்க்கி - பிறந்து வீற்றிருக்கும் சந்திரன் சுவர்க்கியினுடைய, தெள் உறு - (குற்றமில்லாமையால்) தூய்மையாகிய, மெய்க் கீர்த்தி - உண்மையாகிய புகழ், சிறந்து - அழியாமல், வாழிய - வாழக்கடவது.

(வி - ரை) அருமறைகளையும், அந்தணர்களையும், வழுத்துவோரையும் கூறவே,

"ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குறித்தே."

என்பதனால் முறையே மற்ற வைதிக நூல்களையும், மற்ற வருணத்தாரையும், கேட்போரையுங் கொள்க. வாழிய என்னும் வியங்கோள் வினைமுற்று ஈற்றுயிர்மெய் கெட்டு 'வாழி' என நின்றது [நன்-உயிர்-ரு-கஅ]. (கூசு)

ஆக வெண்பா-கூசு.

நளவெண்பா மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.

---

ஸ்ரீ

நளவெண்பாவின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி



நளவெண்பாவின் செய்யுள் முதற்குறிப்பகராதி

முற்றுப்பெற்றது.

---

140
~~139~~ பாட்டு ஒம்

ஆங்கவளு மேக வரசன்
பெருந்தேவி
பூங்கழலான் மீதே புரண்
டழுதா— டாங்கு
மின்னவளையா ரழுதுய
ரெல்லா மெனது
வினைவழிதா னென
றெண் மெலிந்து.

பூங்கழல் = அழகியபாதம்.
ஏக = ஒன்று.
பெருந்தேவி = பட்டமகிஷி,
பட்டராணி

நீதிநூற் கோத்து: இதில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி இவ்வாறின் மூலமும், உரையும் அடங்கியுள்ளன. ... விலை அணா 6

நீதிநூற்றிரட்டு: ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம், இவ்வேழின் மூலமும், அவற்றின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பும் ... விலை அணா 8

நீதிச் செய்யுள் திரட்டு: குறள், நாலடியார், தேவாரம், திருவாய்மொழி முதலிய பலநூல்களிலிருந்து சிறந்த நீதிகளைப் போதிக்கும் செய்யுள்கள் எடுத்துத் திரட்டப்பட்டது ... அணா 2

பாரத நீதி: வடமொழி வியாஸ பாரதத்தில் ஆர்யமத தர்மங்களையும், நீதிகளையும் பற்றிச் சொல்லியுள்ள நீதி வாக்யங்கள் அடங்கிய கிரந்த சுலோகமும், தமிழ் தாத்பரியமும்: விலைஅணா 2

பிரச்நோத்தர ரத்நமாலிகை: ஆர்யமததர்மங்களையும், நீதிகளையும் திரட்டி ஸ்ரீ சங்கராசாரியர் வடமொழியில் வினா விடை ரூபமாக இயற்றியுள்ள அரிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு ... விலை அணா 2

வீரசைவ வினாவிடை: அணா 5

ஸ்ரீ சுப்ரமண்யர் சகஸ்ரநாம அணா 2

மாதரொழுக்க இலக்கணம்: இதில் ஸ்திரீகள் நடந்துகொள்ள வேண்டிய விதங்களும், கற்புடைய ஸ்திரீகளின் பிரபாவமும் அடங்கியுள்ளன அணா 2

நீதிநெறிவிளக்கம் உரை: அணா 8

நல்லொழுக்கம் (வசனம்): பை 9

திருக்குறள் மூலம்: விலை அணா 4

ஔவைகுறள் மூலம்: விலை அணா 2

இனிது நாற்பது உரை: அணா 3

இன்னாநாற்பது உரை: அணா 3

களவழி நாற்பது உரை: அணா 2

கார்நாற்பது உரை: விலை அணா 2

சிறுபஞ்ச மூலம் உரை: அணா 4

நான்மணிக்கடிகை உரை: விலை அணா 5

முதுமொழிக்காஞ்சி உரை: விலை அணா 2½

திரிகடுகம் உரை: விலை அணா [illegible]

ஏலாதி உரை: ... விலை அணா 6

[illegible]நெறிச்சாரம் மூலம்: அணா [illegible]

ஆசாரக்கோவை உரை: அணா 3

பழமொழி உரை: விலை ரூபா 2

நாலடியார் உரை: விலை ரூபா 2

திருக்குறள் உரை: விலை ரூபா 4

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை-இம்மூன்றும் மகாவித்வான் இராமாநுஜ கவிராயர் உரையுடன் விலை அணா 12

நளவெண்பா உரை: விலை ரூ 1½

தண்டியலங்காரம் உரை: ரூ 1[illegible]

சிவசிவ வெண்பா, சோமேசர் முதுமொழிவெண்பா, முருகேசர் முதுநெறிவெண்பா அணா [illegible]